உ

செந்திலாண்டவன் துணை

திருச்சிற்றம்பலம்

திருக்கடவூர்த்

# திருமுறையும் பிரபந்தங்களும்

[மூலம்]






திருக்கடவூர்

ஸ்ரீ அபிராமியம்மை சமேத அமிர்தகடேசுவரர்

மகா கும்பாபிஷேக

நினைவு மலர்

21—4—1957



ஸ்ரீ காசி மடம் :: திருப்பனந்தாள்

# திருமுறை வெளியீடுகள்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து வெளியீடு:

5-2

உ
சிவசிவ
திருச்சிற்றம்பலம்

# திருக்கடவூர்த்
# திருமுறையும் பிரபந்தங்களும்

[ மூலம் ]



திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்துத் தலைவர்
**ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள்**
அவர்களுடைய திருவுளப்பாங்கின்படி



ஸ்ரீ காசிமடம் இளவரசு
**ஸ்ரீமத் மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள்**
அவர்களால் வெளியிடப்பெற்றது

ஹேவிளம்பி ஆண்டு சித்திரைத் திங்கள் 9-ம் நாள்

ஸ்ரீ காசிமடம்] 1957 [திருப்பனந்தாள்

சிவ சிவ

# திருக்கடவூர் வீரட்டம்

சக்கிரவா ளத்தைஅறை நொடியில்வலம் வந்தனன் ;
சலராசி யேழும்ஏக
சமுத்திரம தாக்கினான் ; விறலினால் வேள்விவரு
தகரைப் பிடித்தேறினான் ;
பக்கமுறு சேடனைச் சாட்டையென மேருகிரி
பம்பரம தாய்ஆட்டினான் ;
பானுவின் தேரிலுனை வைத்துனது தேரின்மேல்
பானுவை எடுத்துவைத்தான் ;
திக்கெட்டும் வாழ்கிரி பிடித்தொன்ற னோடொன்று
சினமாக முட்டவிட்டான் ;
சேயுன்னை விளையாட வேஅழைத் தான்இவன்
திருமுன்வா ராதிருந்தால்
அக்கணம் கோபம்வைப் பான்;எங்கள் குமரனோடு
அம்புலீ ! ஆடவாவே ;
அருள்கால காலனுறை கடவூரில் வேலனுடன்
அம்புலீ ! ஆடவாவே.

— க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத்தமிழ்

# அட்ட வீரட்டம்

## கட்டளைக் கலித்துறை

பூமன் சிரங்கண்டி ; அந்தகன் கோவல் ; புரமதிகை ;
மாமன் பறியல் ; சலந்தரன் விற்குடி ; மாவழுவூர் ;
காமன் குறுக்கை ; யமன்கட வூர் ; இந்தக் காசினியில்
தேமன்னு கொன்றையுந் திங்களும் சூடிதன் சேவகமே.

— தனிப்பாடல்

சிவசிவ

# முகவுரை

மெய்ய னைக்குன்ற வில்லியை மான்மழுக்
கைய னைக்கொடுங் காலனைக் காய்ந்தஎன்
ஐய னைத்தில்லை அம்பலக் கூத்தனைச்
செய்ய னைச்சிந்தை செய்வ(து)என் செய்கையே.

— திருச்சுழியற் புராணம்

சோழவளநாட்டில் பல்வளமிகுந்த காவிரியின் தென்கரையிலுள்ள சிவத்தலங்களில் ஒன்றாகவும், தருமையாதீனத்திற்குச் சொந்தமான இருபத்தேழு தேவஸ்தானங்களில் ஒன்றாகவும் திகழ்வது *திருக்கடவூர் ஆகும். இஃது அட்டவீரட்டத் தலங்களுள் காலனைக் காய்ந்த தலம்; பிரமன், மார்க்கண்டேயர் முதலியோர் பூசிக்கப்பெற்ற தலம்; குங்குலியக்கலயர், காரிக்கோவை பாடிய காரியார், உய்யவந்த தேவர் ஆகியோர் வழிபட்டு வீடுபெற்ற தலம்; திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் மூவராலும் தேவாரம் பெற்ற தலம்; அபிராமி பட்டர் அருள்பெற்ற தலம். இத்தகைய சிறப்புற்ற இச்சிவத்தலத்துத் திருக்கோயில், திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்து 25-வது குருமகா சந்நிதானம் **ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களால்** பல லட்சக் கணக்கான ரூபாய் செலவில் பழுதுபார்த்துச் சீர்திருத்தம்பெற்று, ஹேவிளம்பி ஆண்டு சித்திரைத்திங்கள் 9-ஆம் தேதி அட்டபந்தன மகா கும்பாபிஷேகம் செய்யப்பெறுங் காலத்தில் திருக்கடவூர்த் திருமுறைகளையும் அபிராமி பட்டர் இயற்றிய சிறு பிரபந்தங்களையும் மக்கள் ஓதிப் பயன்பெறவேண்டுமென்ற

---

* திருப்பாற் கடலைத் தேவாசுரர்கள் கடைந்து அமுதத்தைக் குடத்திலிட்டு இங்கே கொண்டுவந்து வைத்து நீராடச் சென்றனர்; பின்னர் திரும்பி வந்து எடுக்க முயன்றனர்; அக்குடம் பாதாளம் வரை ஊடுருவிய சிவலிங்கமாயிற்று. அதுவே 'அமுதலிங்கம். ஆதலால் இத்தலம் கடவூர் என வழங்கலாயிற்று. தற்போது இவ்வூர் திருக்கடையூர் என மருவி வழங்குகிறது.

அருள் நோக்கங்கொண்டு, "திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும்" என்ற பெயருடன் இந்நூல் மகா கும்பாபிஷேக நினைவு மலராகத் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து வெளியீடாக வெளிவருகின்றது.

ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் இதுவரை சைவ சமயத்திற்கும் தமிழ் மொழி வளர்ச்சிக்கும் ஏனைய பொது நலங்களுக்கும் வழங்கிய அருட்கொடை சுமார் 40 லட்சம் ரூபாய்களுக்குமேல் என்பதைத் தமிழுலகம் நன்கறியும். இன்னும் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் பிற அறங்களுக்காக நாளும் அளவற்ற பொருளை வழங்கி வருகின்றார்கள். திருக்கடவூர் ஸ்ரீ அபிராமியம்மை சமேத அமிர்தகடேசுவரர் திருவருட் பெருக்கைச் சைவ அன்பர்கள் எளிதில் பெற்று நற்பயன் அடையவேண்டும் என்ற திருவுளங்கொண்டு இச்சிறு வெளியீட்டை வெளியிட்டு வழங்க ஆணை தந்தருளியது, சைவ மக்கள் போற்றிப் பாராட்டற்குரியதாகும். அவர்களின் அருட்கொடை என்றும் சிறந்தோங்கி விளங்குவதாக.

இச்சிறுநூல் நன்முறையில் அமைய ஆகும் பணிகளைப் புரிந்த திருப்பனந்தாள் சிவநெறிச் செல்வர் திரு. K. M. வேங்கடராமையா. M.A., B.O.L.' அவர்களுக்கு எனது நன்றி என்றும் உரியதாகுக.

அமிர்தகடேசுவரரின் திருவருளைப் பெறுதற்கு அமைந்த இச்சிறு நூலை வெளியிடுதற்குத் திருவுளம் பாலித்தருளிய ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களுக்கும் ஸ்ரீமத் இளவரசு சுவாமிகள் அவர்களுக்கும் சைவ உலகம் நன்றி பாராட்டும் கடப்பாடுடையது. இந்நூலைச் சைவ மக்கள் பாராயணம் செய்து அம்மையப்பரின் திருவருளைப்பெற வேண்டுகின்றேன்.

திருச்சிராப்பள்ளி
9—4—'57

இங்ஙனம்
தி. பட்டுச்சாமி ஓதுவார்

சிவசிவ

திருச்சிற்றம்பலம்

# திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும்

---

## கணபதி துதி

பாசத் தளையறுத்துப் பாவக் கடல்கலக்கி
நேசத் தளைப்பட்டு நிற்குமே—மாசற்ற
காரார் வரையீன்ற கன்னிப் பிடியளித்த
ஓரானை வந்தெ னுளத்து.

— காசிக் கலம்பகம் – ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்]

## திருஞானசம்பந்த சுவாமிகள்

### தேவாரம்

**பண் - காந்தாரபஞ்சமம்** [3-ஆம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சடையுடை யானும்நெய் யாடலா னுஞ்சரி கோவண
உடையுடை யானும்மை யார்ந்தவொண் கண்உமை கேள்வனும்
கடையுடை நன்னெடு மாடமோங் குங்கட வூர்தனுள்
விடையுடை யண்ணலும் வீரட்டா னத்தர னல்லனே 1

எரிதரு வார்சடை யானும்வெள் ளையெரு தேறியும்
புரிதரு மாமலர்க் கொன்றைமா லைபுனைந் தேத்தவே
கரிதரு காலனைச் சாடினா னுங்கட வூர்தனுள்
விரிதரு தொல்புகழ் வீரட்டா னத்தர னல்லனே. 2

நாதனுந் நள்ளிரு ளாடினா னுங்களிர் போதின்கண்
பாதனும் பாய்புலித் தோலினா னும்பசு வேறியும்
காதலர் தண்கட வூரினா னுங்கலந் தேத்தவே
வேதம தோதியும் வீரட்டா னத்தர னல்லனே. 3

மழுவமர் செல்வனும் மாசிலா தபல பூதமுன்
முழவொலி யாழ்குழல் மொந்தைகொட் டமுது காட்டிடைக்

கழல்வளர் கால்குஞ்சித் தாடின னுங்கட வூர்தனுள்
விழவொலி மல்கிய வீரட்டா னத்தர னல்லனே. 4

சுடர்மணிச் சுண்ணவெண் ணீற்றின னுஞ்சுழல் வாயதோர்
படமணி நாகம் அரைக்கசைத் தபர மேட்டியும்
கடமணி மாவுரித் தோலின னுங்கட வூர்தனுள்
விடமணி கண்டனும் வீரட்டா னத்தர னல்லனே. 5

பண்பொலி நான்மறை பாடியா டிப்பல வூர்கள்போய்
உண்பலி கொண்டுழல் வானும்வா னின்னெளி மல்கிய
கண்பொலி நெற்றிவெண் டிங்களா னுங்கட வூர்தனுள்
வெண்பொடிப் பூசியும் வீரட்டா னத்தர னல்லனே. 6

செவ்வழ லாய்நில னாகிநின் றசிவ மூர்த்தியும்
முவ்வழல் நான்மறை யைந்துமா யமுனி கேள்வனும்
கவ்வழல் வாய்க்கத நாகமார்த் தான்கட வூர்தனுள்
வெவ்வழ லேந்துகை வீரட்டா னத்தர னல்லனே. 7

அடியிரண் டோருடம் பைஞ்ஞான்கி ருபது தோள்தச
முடியுடை வேந்தனை மூர்க்கழித் தமுதல் மூர்த்தியும்
கடிகம ழும்பொழில் சூழுமந் தண்கட வூர்தனுள்
வெடிதலை யேந்தியும் வீரட்டா னத்தர னல்லனே. 8

வரைகுடை யாமழை தாங்கின னும்வளர் போதின்கண்
புரைகடிந் தோங்கிய நான்முகத் தான்புரிந் தேத்தவே
கரைகடல் சூழ்வையங் காக்கின்ற னுங்கட வூர்தனுள்
விரைகமழ் பூம்பொழில் வீரட்டா னத்தர னல்லனே. 9

தேரரும் மாசுகொள் மேனியா ருந்தெளி யாததோர்
ஆரருஞ் சொற்பொரு ளாகிநின் றஎம தாதியான்
காரிளங் கொன்றைவெண் டிங்களா னுங்கட வூர்தனுள்
வீரமுஞ் சேர்கழல் வீரட்டா னத்தர னல்லனே. 10

வெந்தவெண் ணீறணி வீரட்டா னத்துறை வேந்தனை
அந்தணர் தங்கட வூருளா னையணி காழியான்
சந்தமெல் லாமடிச் சாத்தவல் லமறை ஞானசம்
பந்தன செந்தமிழ் பாடியா டக்கெடும் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

# திருநாவுக்கரசு சுவாமிகள்

## தேவாரம்

திருநேரிசை [4-ஆம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பொள்ளத்த காய மாயப் பொருளினைப் போக மாதர்
வெள்ளத்தைக் கழிக்க வேண்டில் விரும்புமின் விளக்குத் தூபம்
உள்ளத்த திரியொன் றேற்றி உணருமா றுணர வல்லார்
கள்ளத்தைக் கழிப்பர் போலும் கடவூர்வீ ரட்ட னாரே. 1

மண்ணிடைக் குரம்பை தன்னை மதித்துநீர் மைய லெய்தில்
விண்ணிடைத் தரும ராசன் வேண்டினால் விலக்கு வாரார்
பண்ணிடைச் சுவைகள் பாடி ஆடிடும் பத்தர்க் கென்றுங்
கண்ணிடை மணியர் போலுங் கடவூர்வீ ரட்ட னாரே. 2

பொருந்திய குரம்பை தன்னுள் பொய்ந்நடை செலுத்து கின்றீர்
ஒருத்தனை யுணர மாட்டீர் உள்ளத்திற் கொடுமை நீக்கீர்
வருத்தின களிறு தன்னை வருத்துமா வருத்த வல்லார்
கருத்தினில் இருப்பர் போலுங் கடவூர்வீ ரட்ட னாரே. 3

பெரும்புலர் காலை மூழ்கிப் பித்தர்க்குப் பத்த ராகி
அரும்பொடு மலர்கள் கொண்டாங் கார்வத்தை யுள்ளே வைத்து
விரும்பிநல் விளக்குத் தூபம் விதியினால் இடவல் லார்க்குக்
கரும்பினிற் கட்டி போல்வார் கடவூர்வீ ரட்ட னாரே. 4

தலக்கமே செய்து வாழ்ந்து தக்கவா றொன்று மின்றி
விலக்குவா ரிலாமை யாலே விளக்கத்திற் கோழி போன்றேன்
மலக்குவார் மனத்தி னுள்ளே காலனார் தமர்கள் வந்து
கலக்கநான் கலங்கு கின்றேன் கடவூர்வீ ரட்ட னாரே. 5

பழியுடை யாக்கை தன்னிற் பாழுக்கே நீரி றைத்து
வழியிடை வாழ மாட்டேன் மாயமுந் தெளிய கில்லேன்
அழிவுடைத் தாய வாழ்க்கை ஐவரால் அலைக்கப் பட்டுக்
கழியிடைத் தோணி போன்றேன் கடவூர்வீ ரட்ட னாரே. 6

மாயத்தை அறிய மாட்டேன் மையல்கொள் மனத்த னாகிப்
பேயொத்துக் கூகை யானேன் பிஞ்ஞகா பிறப்பொன் றில்லீ
நேயத்தால் நினைய மாட்டேன் நீதனே நீச னேன்நான்
காயத்தைக் கழிக்க மாட்டேன் கடவூர்வீ ரட்ட னாரே. 7

பற்றிலா வாழ்க்கை வாழ்ந்து பாழுக்கே நீரி றைத்தேன்
உற்றலார் கயவர் தேரு ரென்னுங்கட் டுரையோ டொத்தேன்
எற்றுளேன் என்செய் கேன்நான் இடும்பையால் ஞானம் ஏதுங்
கற்றிலேன் களைகண் காணேன் கடவூர்வீ ரட்ட னிரே. 8

சேலின்நேர் அனைய கண்ணார் திறம்விட்டுச் சிவனுக் கன்பாய்ப்
பாலும்நற் றயிர்நெய் யோடு பலபல ஆட்டி யென்றும்
மாலினைத் தவிர நின்ற மார்க்கண்டற் காக அன்று
காலனை உதைப்பர் போலுங் கடவூர்வீ ரட்ட னிரே. 9

முந்துரு இருவ ரோடு மூவரு மாயி னரும்
இந்திர னோடு தேவர் இருடிகள் இன்பஞ் செய்ய
வந்திரு பதுகள் தோளால் எடுத்தவன் வலியை வாட்டிக்
கந்திரு வங்கள் கேட்டார் கடவூர்வீ ரட்ட னிரே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருவிருத்தம் [4-ஆம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மருட்டுயர் தீரஅன் றர்ச்சித்த மாணிமார்க் கண்டேயற்காய்
இருட்டிய மேனி வளைவாள் எயிற்றெரி போலுங்குஞ்சிச்
சுருட்டிய நாவில்வெங் கூற்றம் பதைப்ப வுதைத்துங்ஙனே
உருட்டிய சேவடி யான்கட வூருறை உத்தமனே. 1

பதத்தெழு மந்திரம் அஞ்செழுத் தோதிப் பரிவினொடும்
இதத்தெழு மாணிதன் இன்னுயிர் உண்ண வெகுண்டடர்த்த
கதத்தெழு காலனைக் கண்குரு திப்புன லாறொழுக
உதைத்தெழு சேவடி யான்கட வூருறை உத்தமனே. 2

கரப்புறு சிந்தையர் காண்டற் கரியவன் காமனையும்
நெருப்புமிழ் கண்ணினன் நீள்புனற் கங்கையும் பொங்கரவும்
பரப்பிய செஞ்சடைப் பால்வண்ணன் காலனைப் பண்டொருகால்
உரப்பிய சேவடி யான்கட வூருறை உத்தமனே. 3

மறித்திகழ் கையினன் தானவர் கோனை மனமகிழ்ந்து
குறித்தெழு மாணிதன் ஆருயிர் கொள்வான் கொதித்தசிந்தைக்
கறுத்தெழு மூவிலை வேலுடைக் காலனைத் தானலற
உறுக்கிய சேவடி யான்கட வூருறை உத்தமனே. 4

குழைத்திகழ் காதினன் வானவர் கோனைக் குளிர்ந்தெழுந்து
பழக்கமொ டர்ச்சித்த மாணிதன் ஆருயிர் கொள்ளவந்த
தழற்பொதி மூவிலை வேலுடைக் காலனைத் தானலற
உழக்கிய சேவடி யான்கட வூருறை உத்தமனே. 5

பாலனுக் காயன்று பாற்கடல் ஈந்து பணைத்தெழுந்த
ஆலினிற் கீழிருந் தாரணம் ஓதி அருமுனிக்காய்ச்
சூலமும் பாசமும் கொண்டு தொடர்ந்தடர்ந் தோடிவந்த
காலனைக் காய்ந்த பிரான்கட வூருறை உத்தமனே. 6

படர்சடைக் கொன்றையும் பன்னக மாலை பணிகயிறு
உடைதலை கோத்துழல் மேனியன் உண்பலிக் கென்றுழல்வோன்
சுடர்பொதி மூவிலை வேலுடைக் காலனைத் துண்டமதா
உடறிய சேவடி யான்கட வூருறை உத்தமனே. 7

வெண்டலை மாலையுங் கங்கை கரோடி விரிசடைமேல்
பெண்தனி நாயகன் பேயுகந் தாடும் பெருந்தகையான்
கண்தனி நெற்றியன் காலனைக் காய்ந்து கடலின்விடம்
உண்டருள் செய்தபி ரான்கட வூருறை உத்தமனே. 8

கேழல தாகிக் கிளறிய கேசவன் காண்பரிதாய்
வாழிநன் மாமலர்க் கண்ணிடந் திட்டஅம் மாலவற்கன்(று)
ஆழியும் ஈந்து அடுதிறற் காலனை அன்றடர்த்து
ஊழியும் ஆய பிரான்கட வூருறை உத்தமனே. 9

தேன்திகழ் கொன்றையுங் கூவிள மாலை திருமுடிமேல்
ஆன்திகழ் ஐந்துகந் தாடும் பிரான்மலை ஆர்த்தெடுத்த
கூன்திகழ் வாளரக் கன்முடி பத்துங் குலைந்துவிழ
ஊன்றிய சேவடி யான்கட வூருறை உத்தமனே. 10

திருச்சிற்றம்பலம்

---

திருக்குறுந்தொகை [5-ஆம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மலைக்கொ ளானை மயக்கிய வல்வினை
நிலைக்கொ ளானை நினைப்புறு நெஞ்சமே!
கொலைக்கை யானையுங் கொன்றிடு மாதலால்
கலைக்கை யானைகண் டீர்கட வூரரே. 1

வெள்ளி மால்வரை போல்வதோ ரானையார்
உள்ள வாறெனை உள்புகு மானையார்
கொள்ள மாகிய கோயிலு ளானையார்
கள்ள வானைகண் டீர்கட வூரரே. 2

ஞான மாகிய நன்குண ரானையார்
ஊனை வேவ வுருக்கிய வானையார்
வேன லானை யுரித்துமை அஞ்சவே
கான லானைகண் டீர்கட வூரரே. 3

ஆல முண்டழ காயதோ ரானையார்
நீல மேனி நெடும்பளிங் கானையார்
கோல மாய கொழுஞ்சுட ரானையார்
கால வானைகண் டீர்கட வூரரே. 4

அளித்த ஆன்அஞ்சும் ஆடிய வானையார்
வெளுத்த நீள்கொடி யேறுடை யானையார்
எளித்த வேழத்தை எள்குவித் தானையார்
களித்த வானைகண் டீர்கட வூரரே. 5

விடுத்த மால்வரை விண்ணுற வானையார்
தொடுத்த மால்வரை தூயதோ ரானையார்
கடுத்த காலனைக் காய்ந்ததோ ரானையார்
கடுத்த வானைகண் டீர்கட வூரரே. 6

மண்ணு ளாரை மயக்குறு மானையார்
எண்ணு ளார்பலர் ஏத்திடு மானையார்
விண்ணு ளார்பல ரும்மறி யானையார்
கண்ணு ளானைகண் டீர்கட வூரரே. 7

சினக்குஞ் செம்பவ ளத்திர ளானையார்
மனக்கும் வல்வினை தீர்த்திடு மானையார்
அனைக்கும் அன்புடை யார்மனத் தானையார்
கனைக்கு மானைகண் டீர்கட வூரரே. 8

வேத மாகிய வெஞ்சுட ரானையார்
நீதி யானில முகிய வானையார்
ஓதி யூழி தெரிந்துண ரானையார்
காத லானைகண் டீர்கட வூரரே. 9

நீண்ட மாலொடு நான்முகன் தானுமாய்க்
காண்டு மென்றுபுக் கார்க ளிருவரும்
மாண்ட வாரழ லாகிய வானையார்
காண்ட லானைகண் டீர்கட வூரரே. 10

அடுத்து வந்த இலங்கையர் மன்னனை
எடுத்த தோள்கள் இறநெரித் தானையார்
கடுத்த காலனைக் காய்ந்ததோ ரானையார்
கடுக்கை யானைகண் டீர்கட வூரரே. 11

திருச்சிற்றம்பலம்

---

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

### தேவாரம்

**பண் - நட்டராகம் [7-ஆம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

பொடியார் மேனியனே புரிநூலொரு பாற்பொருந்த
வடியார் மூவிலைமேல் வளர்கங்கையின் மங்கையொடுங்
கடியார் கொன்றையனே கடவூர்தனுள் வீரட்டத்தெம்
அடிகேள் என்னமுதே எனக்கார்துணை நீயலதே. 1

பிறையா ருஞ்சடையாய் பிரமன்றலை யிற்பலிகொள்
மறையார் வானவனே மறையின்பொரு ளானவனே
கறையா ரும்மிடற்றாய் கடவூர்தனுள் வீரட்டத்தெம்
இறைவா என்னமுதே எனக்கார்துணை நீயலதே. 2

அன்றா லின்நிழற்கீழ் அறம்நால்வர்க் கருள்புரிந்து
கொன்றாய் காலனுயிர் கொடுத்தாய்மறை யோனுக்கு.மான்
கன்றா ருங்கரவா கடவூர்த்திரு வீரட்டத்துள்
என்தா தைபெருமான் எனக்கார் துணை நீயலதே. 3

போரா ருங்கரியின் உரிபோர்த்துப்பொன் மேனியின்மேல்
வாரா ரும்முலையா ளொருபாகம் மகிழ்ந்தவனே
காரா ரும்மிடற்றாய் கடவூர்தனுள் வீரட்டானத்(து)
ஆரா வென்னமுதே எனக்கார் துணை நீயலதே. 4

மையார் கண்டத்தினாய் மதமாவுரி போர்த்தவனே
பொய்யா தென்னுயிருட் புகுந்தாயின்னம் போந்தறியாய்
கையா ராடரவா கடவூர்தனுள் வீரட்டத்தெம்
ஐயா என்னமுதே எனக்கார் துணை நீயலதே. 5

மண்நீர் தீவெளிகால் வருபூதங்க ளாகி.மற்றும்
பெண்ணோ டாணலியாய்ப் பிறவாவுரு வானவனே
கண்ணா ருண்மணியே கடவூர்தனுள் வீரட்டத்தெம்
அண்ணா என்னமுதே எனக்கார் துணை நீயலதே. 6

எரியார் புன்சடைமேல் இளநாகம் அணிந்தவனே
நரியா ருஞ்சுடலை நகுவெண்டலை கொண்டவனே
கரியார் ஈருரியாய் கடவூர்தனுள் வீரட்டத்தெம்
அரியாய் என்னமுதே எனக்கார் துணை நீயலதே. 7

வேறா வுன்னடியேன் விளங்குங்குழைக் காதுடையாய்
தேறேன் உன்னையல்லால் சிவனேயென் செழுஞ்சுடரே
காறூர் வெண்மருப்பா கடவூர்த்திரு வீரட்டத்துள்
ஆறூர் செஞ்சடையாய் எனக்கார் துணை நீயலதே. 8

அயனோ டன்றரியும் அடியும்முடி காண்பரிய
பயனே எம்பரனே பரமாய பரஞ்சுடரே
கயமா ருஞ்சடையாய் கடவூர்த்திரு வீரட்டத்துள்
அயனே என்னமுதே எனக்கார் துணை நீயலதே. 9

காரா ரும்பொழில்சூழ் கடவூர்த்திரு வீரட்டத்துள்
ஏரா ரும்மிறையைத் துணையாஎழில் நாவலர்கோன்
ஆரூ ரன்னடியா னடித்தொண்ட னுரைத்ததமிழ்
பாரோர் ஏத்தவல்லார் பரலோகத் திருப்பாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

உ

செந்திலாண்டவன் துணை

அபிராமி பட்டர்

அருளிய

# திருக்கடவூர்ப் பிரபந்தங்கள்

[ மூலம் ]

---

திருக்கடவூர்க்

## கள்ள விநாயகர் பதிகம்[1]

கட்டளைக் கலித்துறை

பங்கயத் தாளும் ஒருநான்கு தோளும் படாமுகமும்
திங்களின் கோடும் வளர்மோ தகத்துடன் செங்கையிலே
அங்குச பாசமு மாகிவந்(து) என்றனை ஆண்டருள்வாய்;
வெங்கய மே!கட வூர்வாழுங் கள்ள விநாயகனே! 1

உண்ணும் பொழுதும் உறங்கும் பொழுதும் ஒருதொழிலைப்
பண்ணும் பொழுதும் பகரும் பொழுதும்நின் பாதத்திலே
நண்ணுங் கருத்துத் தமியேனுக் கென்றைக்கு நல்குவையோ?
விண்ணும் புகழ்க்கட வூர்வாழுங் கள்ள விநாயகனே! 2

யாதொன்றை யாகிலும் எண்ணிய போ(து)உன் இணைக்கமல
பாதம் பரவிய பேர்கட் கலாது பலித்திடுமோ?
பேதம் தெரிந்த மறையோர் தமது பெருந்தெருவில்
வேதம் பயில்கட வூர்வாழுங் கள்ள விநாயகனே! 3

அரன்என் பவனையும் அம்புயத் தோனையும் ஆழிசங்கு
கரன்என் பவனையுங் கைதொழ வேண்டிஉன் கால்தொழுவார்;
இரவும் பகலும் இயலிசை நாடக மென்னும் நன்னூல்
விரவுந் தமிழ்க்கட வூர்வாழுங் கள்ள விநாயகனே! 4

---

1. கள்ள விநாயகர் - இவர் தேவர்களின் உள்ளத்தைக் கவர்ந்தவர். ஆதலின் இப்பெயர்பெற்றார். இவரைச் 'சோர கணபதி' என வட நூல் கூறும்.

துதியேன் எனினும் தொழுகேன் எனினும் தொழும்பர்தமை
மதியேன் எனினும் வணங்கேன் எனினும் வலியவந்து
கதியே தரும்வழி காட்டிடு வாய்;நின் கருணையினால்
விதியே புகழ்க்கட வூர்வாழுங் கள்ள விநாயகனே! 5

நாகந் துரகம் பலபணி ஆடை நவநிதிகள்
பாகஞ்சு மென்மொழியாள் போகமும் உன்றன் பாதமதில்
மோகந் திகழப் பணிந்தோர்க்(கு) அலாமல் முயன்றிடுமோ?
மேகம் பயில்கட வூர்வாழுங் கள்ள விநாயகனே! 6

இளங்குஞ் சரச்செழுங் கன்றே! எனச்சொலி ஏத்திநன்றாய்
உளங்கசிந் தங்கையால் குட்டிக்கொண் டோர்க்கோர் குறையுமுண்டோ?
வளங்கொண்ட மூவர் தமைமறித் தேதமிழ் மாலைகொண்டு
விளங்கும் புகழ்க்கட வூர்வாழுங் கள்ள விநாயகனே! 8

தண்டா யுதத்தையும் சூலா யுதத்தையும் தாங்கியென்னைக்
கண்டாவி கொள்ள நமன்வரும் வேளையில் காத்திடுவாய்;
வண்டார வாரஞ்செய் மாமலர்ச் சோலை வளப்பமுடன்
விண்டா வியகட வூர்வாழுங் கள்ள விநாயகனே! 8

மூவரும் தங்கள் தொழிலே புரிந்திட முந்திமுந்தித்
தாவரும் நெற்றியில் தாக்கியுன் நாமத்தைச் சாற்றிடுவார்;
தேவரும் போற்றிய தேவே! உனையன்றித் தெய்வமுண்டோ?
மேவருஞ் சீர்க்கட வூர்வாழுங் கள்ள விநாயகனே! 9

மைப்பொரு வாரண மாமுக மீதினில் வாய்ந்ததுதிக்
கைப்பொரு ளே! என்று கைதொழு வோர்க்குன் கருணைவைப்பாய்;
[1]பொய்ப்பணி யோர்அறி யாதமு தீசன் புகழுமெங்கள்
மெய்ப்பொரு ளே! கட வூர்வாழுங் கள்ள விநாயகனே! 10

—

1. பா-ம். அப்பணி யும்அமு தீசர் மகிழ்அபி ராமியம்மை.

# அமுதகடேசுவரர்[1] பதிகம்

[ஆசிரிய விருத்தம்]

சுடர்மணிக் குழையும் மலர்க்கரத் துழையும்
தும்பிகள் இடையிடை நுழையும்
தும்பைமா லிகையும் வம்புவார் சடையும்
துண்டவெண் பிறையுமுந் நூலும்
நடனபங் கயமும் கிரணகங் கணமும்
நங்கைபங் கமர்ந்தசுந் தரமும்
நயனமூன் றுடைய கோலமுங் கண்டோர்
நமனையுங் காணவல் லவரோ?
கொடிபல தொடுத்த நெடியமா மணிபொற்
கோபுரம் பாரிடந் தொடுத்துக்
கொழுந்துவிட் டெழுந்து வானில வெறிப்பக்
கொண்டல்வந் துலவியே நிலவும்
கடிமலர்த் தடமுஞ் சுருதியோ திடமும்
கன்னிமா மாடமுஞ் சூழ்ந்து
கனவளஞ் [2]செறிந்த [3]கடவையம் பதியாய்!
காலனைக் காய்ந்ததற் பரனே! 1

தண்டமுங் கயிறுஞ் சூலமும் புகைந்த
தழலுமிழ் கண்களும் வளைந்த
தந்தமுஞ் சிவந்த குஞ்சியுங் கரிய
சைலமே அனையமே னியுமாய்
அண்டிய சமனைக் கண்டுள மயங்கி
அறிவழிந் திருவிழி களும்பஞ்(சு)
அடைந்துவாய் புலர்ந்து மெய்ம்மறந் திடும்போ(து)
அம்பிகை தன்னுடன் வருவாய்;
வண்டுகள் முரன்று முகைமுறுக் குடைந்து
மதுமழை பொழிந்துதா தளைந்து
மடல்விரிந் தலர்ந்து பொன்னிறம் பொதிந்த
மண்டலங் கொன்றைவார் சடையாய்!
கண்டவர் உளமுங் கண்ணுமே கவருங்
கனதன வனிதையர் நெருங்கும்
கனவளஞ் செறிந்த கடவையம் பதியாய்!
காலனைக் காய்ந்ததற் பரனே! 2

---

1. அமுதகடேசுவரர் - இவர் அமுதமே இலிங்கமாக ஆனமையின் இப்பெயர் பெற்றார். அமுதகடோற்பவர், அமுதலிங்கம் எனவும் பெயர் பெறுவர். 2. பா-ம். சிறந்த. 3. கடவை - திருக்கடவூர்.

தனபதி யனைய செல்வமே பெறினும்
சதமகன் போகமே பெறினும்
தாரணி சுமக்குஞ் சேடனே நிகராய்த்
தக்கதோ ரறிவெலாம் பெறினும்
அனகனை யொத்த அழகுதான் பெறினும்
அருமறைக் கிழவனே எனினும்
ஐய! நின் கடைக்கண் அருள்தவ றியபேர்
அங்கையோ டேந்திநின் றுழல்வார்;
பனககங் கணத்தாய்! அளப்பருங் குணத்தாய்!
பார்வதி வாமபா கத்தாய்!
பவளநன் னிறத்தாய்! தவளதூ ளிதத்தாய்!
பரிபுரம் அலம்புபொற் பதத்தாய்!
கனகமுந் துகிலுந் தரளமும் வயிரக்
கலன்களும் நிலந்தொறு மிடைந்த
கனவளஞ் செறிந்த கடவையம் பதியாய்!
காலனைக் காய்ந்ததற் பரனே! 3

தந்தையை மனையை ஒக்கலைத் துணையைத்
தாயைமென் குதலைவாய்ச் சேயைத்
தனத்தையெள வனத்தை இன்பபோ கத்தைத்
தையல்நல் லாள்பெறுந் திறத்தை
அந்தியும் பகலும் விரும்பிமெய் சோம்பி
ஆழ்கடற் படுதுரும் பாகி
அலக்கழிந் தேனைப் புலப்படத் திருத்தி
ஆட்கொள நினைத்திலாய் அன்றோ!
சிந்தைநைந் துருக இன்னிசை படித்துச்
சிலம்பொலி யாரவே நடித்துச்
செழும்புனற் சடைமேற் கரந்தையை முடித்துத்
திருவெணி(று) உடலெலாந் தரித்துக்
கந்தைகோ வணம்தோல் பொக்கணந் தாங்கிக்
கபாலமொன் றேந்திநின் றவனே!
கனவளஞ் செறிந்த கடவையம் பதியாய்!
காலனைக் காய்ந்ததற் பரனே! 4

வஞ்சகக் கிணறாய்த் துன்பவா ரிதியாய்
வறுமையென் பதற்கிருப் பிடமாய்
மறம்பொதி குடிலாய் அசத்திய விதையாய்
மயல்விளை கழனியாய்ப் பாவ
சஞ்சித வடிவாய்ச் சருச்சரைப் புரமாய்ச்
சங்கட நோய்க்களஞ் சியமாய்த்
தலைதடு மாறித் திரியுமென் றனக்குன்
தண்ணருள் கிடைக்குமோ ? அறியேன் ;
நஞ்சமும் பகுவாய்ச் சுடிகைமுள் ளெயிற்று
நகைமணிப் பாந்தளஞ் சூழ்ந்த
நளிரிளம் பிறையோ டொளிர்செழுஞ் சடையாய் !
நங்கையர் முழுமதி முகத்தைக்
கஞ்சமென் மலர்கள் கண்டுவா யொடுங்கும்
கந்தமுந் தியதடஞ் சூழும்
கனவளஞ் செறிந்த கடவையம் பதியாய் !
காலனைக் காய்ந்ததற் பரனே ! 5

பிரமனுஞ் சலிக்கத் தாயர்சஞ் சலிக்கப்
பேதையர் கண்(டு)அசங் கதிக்கப்
பிணிகளும் பகைக்க மூப்புவந் தலைக்கப்
பின்றொடர்ந்(து) ஆசைசென் றிழுக்கத்
தருமனும் வெறுக்க நரகமும் ஒறுக்கத்
தாரணி சுமந்துநொந் திளைக்கச்
சகடெனச் சுழலும் கறங்கெனக் கொடிய
சடலம தெடுக்கநான் இலக்கோ ?
குருமணி இமைக்கும் புதுமலர்த் தடத்தில்
கோட்டிள மோட்டுமா மேதிக்
குலங்கள்போய்ப் படிந்து நலங்கிளர் செழுந்தேன்
குவளைமென்(று) ஒழுக்கிய தோற்றம்
கரியமா கடலிற் புகுந்துநீர் அருந்துங்
காளமே கங்களோ வெனவாய்க்
கனவளஞ் செறிந்த கடவையம் பதியாய் !
காலனைக் காய்ந்ததற் பரனே ! 6

மறுகுவெஞ் சினத்தர் தெருமவ குணத்தர்
வஞ்சகம் பொதிந்தநெஞ் சகத்தர்
வழக்கமொன் றில்லாப் பிணக்குறு மூடர்
மதியிலாப் பதிதர்பால் அணுகிப்
பொறுமையில் தருமன் நெறியினில் சேடன்
புலமையில் குறியமா முனிவன்
புரந்தரன் எனவும் நிரந்தரம் புகழ்ந்து
பொழுதவம் போக்கினன் அந்தோ!
வெறிமலர்ப் பிரசஞ் சொரிந்துவண் டினங்கள்
மிடைந்துமா முகிலினக் கிழித்து
மேலிடத்(து) இரவிப் பசும்புர விகளாய்
விளங்கியே விண்டல முகட்டைக்
கருவினின் றோங்கிச் செறியும்ஐந் தருக்குள்
கற்பகத் தருவினை யொப்பாய்!
கனவளஞ் செறிந்த கடவையம் பதியாய்!
காலனைக் காய்ந்ததற் பரனே! 7

நெஞ்சகங் குழைந்து பணிவிடைக் கிசைந்து
நீறொடு கண்டிகை புனைந்து
நிலவுபொற் கோயி லதைவலம் புரிந்து
நெகிழுமுன் நாண்மலர் எடுத்து
வஞ்சமா மயக்கில் மயங்கும்ஐம் புலனும்
மாற்றலர் வலிமையைக் களைந்துன்
மலர்ப்பதத்(து) இருத்தி அலக்கணைத் துரத்தி
மதிமிகு வாழ்வளித் திடும்ஓம்
சுஞ்சக[1] எனுநற் றாயமுன் றெழுத்தைச்
சுகிர்தமாய்க் கொண்டருச் சனைசெய்
தொண்டர்கள் உறவைக் கொண்டுனைப் பணியச்
சுணங்கனும் எனக்கருள் புரிவாய்;
கஞ்சமென் மலர்மீ(து) அஞ்சமே படரக்
கார்மயில் ஓரமாய் நடிக்கும்
கனவளஞ் செறிந்த கடவையம் பதியாய்!
காலனைக் காய்ந்ததற் பரனே! 8

1. ஓம் சும் சக - இது மிருத்தஞ்சய மந்திரம்.

மைக்கயல் விழியால் மயக்கியுள் ளுருக்கி
மஞ்சளால் முகத்தினை மினுக்கி
மணிநகை பெருக்கி ஆசையுண் டாக்கி
வளரிள முலைத்துகில் இறுக்கிப்
பக்கல்வந் தமர்ந்து மென்மொழி பகர்ந்து
பரவசம் அடைந்துமேல் விழுந்து
படிற்றுளம் உணர்த்தாத சத்திய முரைத்துப்
பறித்திடப் பயிலுபா வையர்க்காய்த்
துக்கசா கரத்தில் அழுந்தினா டோறும்
தோதகப் பட்டபா தகனைத்
துய்யசெங் கமலச் செய்யதா ளிணைக்கே
தொண்டுகொண் டால்குறை யுறுமோ?
கைக்கழுங் காடுந் திறத்தினை நிகராய்க்
கமலமென் மலர்மிசை அறுகால்
களியொடு சுழலுங் கடவையம் பதியாய்!
காலனைக் காய்ந்ததற் பரனே! 9

செயல்பணி விடையாய்ச் செப்பல்ஜங் தெழுத்தாய்த்
திரிதலே வலம்புரி தலுமாய்ச்
சிந்தையின் நினைவே தியானமாய் உண்டு
தெவிட்டல்நை வேதனம் சிறப்பாய்த்
துயிறல்வந் தனையாய்த் திருவுளத் துவந்து
துள்ளுவெள் விடையினில் ஏறித்
தொண்டரும் விசும்பில் அண்டருங் காணத்
தோகையோ(டு) எனக்குவந் தருள்வாய்;
வயல்வரம் புறைந்த கடைசியர் முகத்தை
மதியம்என்(று) அதிசய மிகுந்து
வரும்பக லிடத்தும் இரவினும் குவளை
வாயொடுங் காமலே விளங்கும்
கயனெடுந் தடமுங் கமுகமுங் கமுகைக்
காட்டிய கன்னலும் பொதிந்த
கனவளஞ் செறிந்த கடவையம் பதியாய்!
காலனைக் காய்ந்ததற் பரனே! 10

---

# காலசம்மார மூர்த்தி[1] பதிகம்

[சந்த விருத்தம்]

அந்தரத் தமரர் மந்தரத் தையொலி
அலைக டற்றலை நிறுத்திநின்(று)
அழலுறக் கடைய அதனிடத் துடைய
அமுத முற்றடையும் அண்ணலார்
கந்த ரத்திடை கறுப்பி னுர்கவுரி
கண்க ளித்திடு முறுப்பினுர்
கால காலகட வூரர் கோலமது
கண்டு தண்டனிட வல்லபேர்
பந்தம் ஆசையவ மான நிந்தையொடு
பழிப்ப சத்திய மனப்பயம்
படிறு வஞ்சனை அனர்த்தமா கொடுமை
பாப மீறுகொலை சஞ்சலம்
தொந்த மோகமவி வேக மாசுசதி
துயர மூடமுழு வைரநீள்
தோதகங் குடிலம் அவகுணங் தவறு
சோகமுங் தவிரு வார்களே. 1

வெங்கயத் துரியர் பங்கயர்க் கரியர்
வேத வாம்பரியர் தீதிலர்
வீரர் விஞ்சுகர் விநோதர் கஞ்சுகர்
வெற்றிமால் மகிழும் அத்தனுர்
கங்க ணத்தர்மிகு வெங்க ணத்தலைவர்
களத்தி சைந்தபொரு நிர்த்தனர்
கால காலகட வூரர் கோலமது
கண்டு தண்டனிட வல்லபேர்
திங்கள் வெண்குடை கவிப்ப மும்முரசு
சென்று சென்றெதிர் ஒலிப்பஎண்
திசைபுரக்கு மனர்கை முகிழ்ப்பஇகல்
எவ்வருந் திறைய ளப்பமேல்
மங்கை மார்கவரி காலசைப் பநெடு
மகர தோரண வளப்பமாய்
மத்த யானைமிசை வெற்றி யாளரென
வைய கந்தனில் இருப்பரே. 2

---

1. கால சம்மார மூர்த்தி-இவர் இயமனை உதைத்து அருள்புரிந்தவர்: தெற்கு முகமாக எழுந்தருளி இருப்பவர்: ஆண்டில் ஒருமுறை வீதிக்கு எழுந்தருளுபவர். இவருக்கு ஆண்டில் பதினுன்குமுறை திருமஞ்சனம் நடைபெறும்.

திருகு வெள்ளெயிறு வரிநெடுங் கயிறு
செய்ய குஞ்சியொடு நஞ்செனச்
சீறு கோபமுடன் ஏறு தீபவிழி
தெறுமிடிக் குரல்மு ழக்கியே
கரும லைக்குநிகர் எருமையிற் பெரிய
கால்மலைக் குவடு போல்வருங்
கால காலகட வூரர் கோலமது
கண்டு தண்டனிட வல்லபேர்
பொரும முப்படை இலங்கு செஞ்சடை
பொருந்து வெள்விடை திருந்துவெண்
பூதி யாகமொடு தோகை பாகமழல்
பொங்கு நாகமணி கங்கணம்
பெருகு கங்கைநதி முடிவிளங் கிவதி
பிஞ்சு மாமதி கொழுந்தழல்
பெய்த பெற்றிபெறும் ஒற்றை நெற்றிவிழி
பெற்றிருப் பர்அடை யாளமே. 3

பெண்ணி டும்பரி புரத்தி னொலி
பிறந்தி டும்பரி புரத்தினர்
பிறைமு டிக்குளணி கங்கை யார்மறைப்
பொருளை வைத்துளணி கங்கையார்
கண்ணி சைந்ததொரு மூன்றி னுரிய
கயிலை தாழுநக மூன்றினர்
கால காலகட வூரர் கோலமது
கண்டுதண்டனிட வல்லபேர்
மண்ண ளந்தச ரணர்க்கு மென்முளரி
மாலை யாபர ணர்க்குமோர்
வச்சி ரத்திறை வருக்கும் எண்டிகிரி
மாத்தி ரத்துறை வருக்குமே
விண்ண வர்க்குமிகு பண்ண வர்க்குமுயர்
வித்த கர்க்குமதி யொத்தூவாழ்
மெய்த்த வத்துநிலை பெற்ற வர்க்குமவர்
மேலிருப் பர்அடையாளமே. 4

---

1. இது சிவ சாருப பதவியைக் குறிக்கும்,

உரக குண்டலர் நெருங்கி விண்டலர்
உறைந்த வண்டுமுரல் கொன்றையார்
உத்த ரீகமல ரொப்பி லாதசிலை
ஒத்த நெற்றிமுலை மங்கையார்
கரக பாலர்திரி சூலர் நீலமணி
கண்டர் புண்டரிக ஆடையார்
கால காலகட வூரர் கோலமது
கண்டு தண்டனிட வல்லபேர்
விரக மானதில் உணங்கி டார்;உடல்
வேத னைப்பட அறிந்திலார்;
வெகுளி யானது செறிந்திடார்; உலகை
வேண்டி ஈனரை வணங்கிடார்;
நரக மென்பதினி எய்திடார்; கருமம்
நல்ல(து) அல்லதவர் செய்திடார்;
நமனிருந் ததிசை கண்டிடார்; இறுதி
நாளுமே பகுதி யாவரே. 5

துலைநி றுக்குமொரு வணிக னுக்குமது
சூதனுக்குமறு நீதிசேர்
தொல்புவிக் கரச னுக்குமிக் கதமிழ்
சொல்லுமோர் புலவ னுக்குமெய்க்
கலைய னுக்குமதி நடுவ னுக்குமுனி
காத லர்க்குமினி தருள்செயுங்
கால காலகட வூரர் மேவிவளர்
கயிலை போலவரு மயிலனுர்
முலைய ரும்பிவரு பனசமே இனிய
மொழியும் இன்பமுறு வனசமே
முத்தை யொத்தமணி முரலே அளிகள்
மொய்த்த தோள்களிள வேரலே
சிலையி ரண்டனைய புருவமே இரதி
தேவி யொத்தவள் உருவமே
திருமிடற் றழகு சங்கமே அமுது
சிந்து மாணடிபு சங்கமே. 6

விதிசி ரத்தையரி பழியர் அஞ்சுகணை
வேளூரத் தையெரி விழியர்மா
மேருவிற் கையினர் நேர்கடுக் கையினர்
வேள்வியிற் பணியும் வள்ளலார்
கதிர வன்றனது தந்தம் அம்புவியில்
உதிர வன்பொடு புடைத்திடும்
கால காலகடவூரர் மேவிவளர்
கயிலை போலவரு மயிலனார்
மதியில் நஞ்சமு மிருக்குமோ கரிய
மஞ்சு மாலிகை கரிக்குமோ?
வாளரா அமுதம் ஊறுமோ? கனக
வரையிலே புளக மீறுமோ?
எதிர்க லன்பல திருத்துமோ? இடையில்
இலகுமே கலைபொ ருத்துமோ?
விளங்கு தோட்கழை வியக்குமோ? இனிமை
விண்ட சொற்கழை விளங்குமே. 7

இகல றிந்துவரு பகையி னார்புரம்
எரித்திடுங் கொடிய நகையினர்
எரிம ழுப்படை வலத்தினர் முடியில்
ஏறு மீறிய சலத்தினர்
ககன மண்டலமும் உருவி நின்றுவிதி
காணொ ணாதவொரு தாணுவார்
கால காலகட வூரர் மேவிவளர்
கயிலை போலவரு மயிலனார்
முகம திக்குவமை புகலுவார் அளிகள்
மொய்குழற் குவமை நுவலுவார்
முலையி னுக்குவமை பகருவார் இனிய
மொழியி னுக்குவமை மொழிகுவார்
நகையி னுக்குவமை கூறுவார் சரண
நடையி னுக்குவமை பேசுவார்
நயமறிந் திளமை சொல்லுவார் எவரும்
நடுவறிந் தவர்கள் இல்லையே. 8

சிறைய னத்தநறை யெழுவளத் தறிவர்
தினமனத் திடைதி யானமே
செய்து தங்கள்வரம் எய்துதற் கரிய
தேவ தேவர்பரி பூரணர்
கறைமிடற் றலைவர் அலைகடற் பரியர்
கதிதரும் குரவை வெருவிலார்
கால காலகட ஊரர் கோலமது
கண்டு கைதொழுது கொண்டுகாண் ;
எறிதி ரைப்பறை முழக்கி அங்கைதனில்
இக்குவார் சிலைவ ணக்கிநீள்
இருதலைக் குமளி நாணி றுக்கிமுன்
எழுந்து மீசையை முறுக்கிவேள்
வெறிம லர்க்கணை யெடுத்ததுங் கொடிய
வேகமாயது தொடுத்ததும்
மெய்யி னிற்பட விடுத்ததுஞ் செவியில்
விண்டு விண்டுசொல வேணுமோ ? 9

குயில்மொ ழிப்புணர் முலைக்கருங் கணெடு
கோதை பாதியுறை சோதியார்
கொக்க ரித்துவரு தக்க னுருயிர்
குறைத்தெ ழுந்திடு மறத்தினர்
கயிலை நாதர்கண நாதர் பூதியணி
காய தாயகமு மாயினர்
கால காலகட ஊரர் கோலமது
கண்டு கைதொழுது வண்டுகாள் !
அயிலி னுங்கொடிய அம்பினல் மதுர
ஆர வாரமிசை வேயினல்
அந்த ரந்தனில் அசைந்துநின்(று) அடரும்
அம்புலிக் கொடிய தீயினல்
துயில்து றந்துமெய்ம் மறந்து வாடிமிக
சோக மோகம் பிறந்துளத்
தோதகப் படவும் நானகப் படுதல்
சொல்லுவீர் மதனை வெல்லவே. 10

---

திருக்கடவூர்

# [1]அபிராமியம்மைப் பதிகம்

## காப்பு

தூயதமிழ்ப் பாமாலை சூட்டுதற்கு மும்மதன்நால்
வாயைங் கரன்றாள் வழுத்துவாம் :—நேயர்நிதம்
எண்ணும் புகழ்கடவூர் எங்கள்அபி ராமவல்லி
நண்ணும்பொற் பாதத்தில் நன்கு.

## நூல்

[ ஆசிரிய விருத்தம் ]

கலையாத கல்வியும் குறையாத வயதுமோர்
கபடுவா ராத நட்பும்
கன்றாத வளமையுங் குன்றாத இளமையும்
கழுபிணியி லாத உடலும்
சலியாத மனமும்அன் பகலாத மனைவியும்
தவறாத சந்தா னமும்
தாழாத கீர்த்தியும் மாறாத வார்த்தையும்
தடைகள் வாராத கொடையும்
தொலையாத நிதியமும் கோணாத கோலுமொரு
துன்பமில் லாத வாழ்வும்
துய்யநின் பாதத்தில் அன்பும்உத வி[2]பெரிய
தொண்டரொடு கூட்டு கண்டாய் :
அலையாழி அறிதுயிலு மாயனது தங்கையே !
ஆதிகட வூரின் வாழ்வே !
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி !
அருள்வாமி ! [3]அபிராமி யே ! 1

---

1. அபிராமியம்மையார் - இது திருக்கடவூரில் எழுந்தருளிய இறைவியின் திருநாமம் ஆகும். இவ்வம்மையார் தெளிந்த ஞானத் திருவுருவாய் எழுந்தருளி அன்பர்களுக்கு அருள்புரிகின்றார். 2. பா - ம்; பின்பு. 3. அபிராமி யுமையே.

காரளக பந்தியும் பந்தியின் அலங்கலும்
கரிய புருவச் சிலைகளும்
கர்ணகுண் டலமுமதி முகமண் டலம்நுதற்
கத்தூரிப் பொட்டு மிட்டுக்
கூரணிந் திடுவிழியும் அமுதமொழியுஞ் சிறிய
கொவ்வையின் கனிய தரமும்
குமிழனைய நாசியும் குந்தநிகர் தந்தமும்
கோடுசோ டான களமும்
வாரணிந் திருமாந்த வனமுலையும் மேகலையும்
மணிநூ புரப்பா தமும்
வந்தெனது முன்னின்று மந்தகா சமுமாக
வல்வினையை மாற்று வாயே ;
ஆரமணி வானிலுறை தாரகைகள் போலநிறை
ஆதிகட வூரின் வாழ்வே !
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி !
அருள்வாமி ! அபிராமி யே ! 2

மகரவார் குழல்மேல் அடர்ந்துகுமிழ் மீதினில்
மறைந்து வாளைத் துறந்து
மைக்கயலை வேண்டிநின் செங்கமல விழியருள்
வரம்பெற்ற பேர்க ளன்றோ ?
செகமுழுதும் ஒற்றைத் தனிக்குடை கவித்துமேற்
சிங்கா தனத்தி லுற்றுச்
செங்கோலும் மநுநீதி முறைமையும் பெற்றுமிகு
திகிரியுல காண்டு பின்பு
புகர்முகத்(து) ஐராவதப் பாக ராகிநிறை
புத்தேளிர் வந்து போற்றிப்
போகதே வேந்திரன் எனப்புகழ விண்ணில்
புலோமிசை யொடுஞ்சு கிப்பர் ;
அகரமுத லாகிவளர் ஆனந்த ரூபியே !
ஆதிகட வூரின் வாழ்வே !
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி !
அருள்வாமி ! அபிராமி யே ! 3

மறிகடல்கள் ஏழையுந் திகிரிஇரு நான்கையும்
மாதிரக் கரியெட் டையும்
மாநாகம் ஆனதையும் மாமேரு என்பதையும்
மாகூர்மம் ஆனதையு மோர்
பொறியரவு தாங்கிவரு புவனமீ ரேழையும்
புத்தேளிர் கூட்டத் தையும்
பூமகளை யுந்திகிரி மாயவனை யும்அரையிற்
புலியாடை உடையா னையும்
முறைமுறைக ளாயீன்ற முதியவர்களாய்ப் பழைமை
முறைகள் தெரியாத நின்னை
மூவுலகி லுள்ளவர்கள் வாலையென்(று) அறியாமல்
மொழிகின்ற தேது சொல்வாய் ;
அறிவுநிறை விழுமியர்தம் ஆனந்த வாரியே !
ஆதிகட வூரின் வாழ்வே !
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி !
அருள்வாமி ! அபிராமி யே ! 4

வாடாமல் உயிரெனும் பயிர்தழைத் தோங்கிவர
அருள்மழை பொழிந்தும் இன்ப
வாரிதியிலே நின்ன தன்பெனுஞ் சிறகால்
வருந்தா மலேய ணைத்துக்
கோடாமல் வளர்சிற் றெறும்புமுதல் குஞ்சரக்
கூட்டமுத லான சீவ
கோடிகள் தமக்குப் புசிக்கும் புசிப்பினைக்
குறையாம லேகொ டுத்து
நீடாழி யுலகங்கள் யாவையும் நேயமாய்
நின்னுதர பந்தி பூக்கும்
நின்மலி ! அகிலங்களுக்(கு) அன்னை என்றோதும் ;
நீலியென்(று) ஓது வாரோ ?
ஆடாய நான்மறையின் வேள்வியால் ஓங்குபுகழ்
ஆதிகட வூரின் வாழ்வே !
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி !
அருள்வாமி ! அபிராமி யே ! 5

பல்குஞ் சரந்தொட் டெறும்புகடை யானதொரு
பல்லுயிர்க் குங்கல் லிடைப்
பட்டதே ரைக்கும் அன் றுற்பவித் திடுகருப்
பையுறு சீவ னுக்கும்
மல்குஞ் சராசரப் பொருளுக்கும் இமையாத
வானவர் குழாத்தி னுக்கும்
மற்றுமொரு மூவர்க்கு மியாவர்க்கும் அவரவர்
மனச்சலிப் பில்லா மலே
நல்குந் தொழிற்பெருமை உண்டா யிருந்துமிகு
நவநிதி உனக்கி ருந்தும்
நானொருவன் வறுமையிற் சிறியனா னால்அந்
நகைப்புனக் கேஅல்ல வோ?
அல்கலந் தும்பர்நா டளவெடுக் குஞ்சோலை
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே! 6

நீடுல கங்களுக்(கு) ஆதரமாய் நின்று
நித்தமாய் முத்தி வடிவாய்
நியமமுடன் முப்பத் திரண்டறம் வளர்க்கின்ற
நீமனை வியாய்இ ருந்தும்
வீடுவீ டுகடோறும் ஓடிப் புகுந்துகால்
வேசற்(று) இலச்சை யும்போய்
வெண்டுகில் அரைக்கணிய விதியற்று நிர்வாண
வேடமுங் கொண்டு கைக்கோர்
ஓடேந்தி நாடெங்கும் உள்ளந் தளர்ந்துநின்(று)
உன்மத்த னாகி அம்மா!
உன்கணவன் எங்கெங்கும் ஐயம்புகுந் தேங்கி
உழல்கின்ற தேது சொல்வாய்;
ஆடுகொடி மாடமிசை மாதர்விளை யாடிவரும்
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே! 7

ஞானந் தழைத்துன் சொருபத்தை அறிகின்ற
நல்லோர் இடத்தி னிற்போய்
நடுவினி லிருந்துவந் தடிமையும் பூண்டவர்
நவிற்றும் உபதேச முட்கொண்டு
ஈனந்தனைத் தள்ளி எனதுநா னெனுமானம்
இல்லா மலேதுரத்தி
இந்திரிய வாயில்களை இறுகப்பு தைத்துநெஞ்(சு)
இருளற விளக்கேற் றியே
ஆனந்த மானவிழி அன்னமே! உன்னையென்
அகத்தா மரைப்போ திலே
வைத்துவே றேகவலை யற்றுமே லுற்றபர
வசமாகி அழியாத தோர்
ஆனந்த வாரிதியில் ஆழ்கின்ற தென்றுகாண்;
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே! 8

சலதியுல கத்திற் சராசரங் களையீன்ற
தாயா கினுலெனக்குத்
தாயல்ல வோ?யான்உன் மைந்த னன்றோ?எனது
சஞ்சலம் தீர்த்து நின்றன்
முலைசுரந் தொழுகுபா லூட்டிஎன் முகத்தைஉன்
முன்தானை யால்து டைத்து
மொழிகின்ற மழலைக் குகந்துகொண் டிளநிலா
முறுவல்இன் புற்றரு கில்யான்
குலவிவிளையாடல்கொண்டருண்மழைபொழிந்(து)அங்கை
கொட்டி வாவென்(று) அழைத்துக்
குஞ்சரமு கன்கந்தனுக்(கு) இளையன் என்றெனைக்
கூறினுல் ஈனம் உண்டோ?
அலைகடலி லேதோன்று மாருத அமுதமே!
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே! 9

கைப்போது கொண்டுன் பதப்போது தன்னில்
கணப்போதும் அர்ச்சிக் கிலேன்;
கண்போதி னாலுன் முகப்போது தன்னையான்
கண்டு தரிசனை புரிகிலேன்;
முப்போதில் ஒருபோதும் என்மனப் போதிலே
முன்னிஉன் ஆல யத்தின்
முன்போது வார்தமது பின்போத நினைகிலேன்;
மோசமே போய்உ ழன்றேன்;
மைப்போத கத்திற்கு நிகரெனப் போதெரு
மைக்கடா மீதேறி யே
மாகோர காலன் வரும்போது தமியேன்
மனங்கலங் கித்தி யங்கும்
அப்போது வந்துன் அருட்போது தந்தருள்
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே! 10

மிகையுந் துரத்தவெம் பிணியுந் துரத்த
வெகுளி யானதுந் துரத்த
மிடியுந் துரத்தநரை திரையுந் துரத்தமிகு
வேதனை களுந்து ரத்த
பகையுந் துரத்தவஞ் சனையுந் துரத்த
பசியென் பதுந்து ரத்த
பாவந் துரத்த பதிமோகந் துரத்த
பலகா ரியமுந் துரத்த
நகையுந் துரத்தவூழ் வினையுந் துரத்த
நாளுந் துரத்த வெகுவாய்
நாவரண் டோடிகால் தளர்ந்திடும் என்னை
நமனுந் துரத்து வானோ?
அகிலஉல கங்கட்கும் ஆதார தெய்வமே!
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே! 11

---

# அபிராமி யம்மைப் பதிகம்

[ ஆசிரிய விருத்தம் ]

கங்கையொடு தும்பையும் அணிந்தவர் வியக்குங்
கலாமதியை நிகர்வத னமுங்
கருணைபொழி விழிகளும் விண்முகில்கள் வெளிறெனக்
காட்டிய கருங்கூந் தலுஞ்
சங்கையில் லாதொளிரு மாங்கல்ய தாரணந்
தங்குமணி மிடறு மிக்க
சதுர்பெருகு துங்கபா சாங்குசம் இலங்குகர
தலமுமிர லணியும் அரவும்
புங்கவர்க் கமுதருளு மந்தரகு சங்களும்
பொலியு நவமணி நூபுரம்
பூண்டசெஞ் சேவடியை நாளும் புகழ்ந்துமே
போற்றியென வாழ்த்த விடைமேல்
மங்கள மிகுந்தநின் பதியுடன் வந்தருள்செய்
வளர்திருக் கடவூ ரில்வாழ்
வாமி!சுப நேமி!புகழ் நாமி!சிவ சாமிமகிழ்
வாமி!அபி ராமி! உமையே ! 1

சந்திர சடாதரி! முகுந்த சோதரி! துங்க
சலசலோ சனமா தவி!
சம்ப்ரம பயோதரி! சுமங்கலி! சுலட்சணி!
சாற்றருங் கருணை கரி!
அந்தரி! வ்ராகி!சாம் பவி!அமர தோதரி!
அமலை!செக சால சூத்ரி!
அகிலாத்ம காரணி! விநோதசய நாரணி!
அகண்ட சின்மய பூரணி!
சுந்தரி! நிரந்தரி! துரந்தரி! வரைராச
சுகுமாரி! கௌமாரி! உத்
துங்ககல் யாணி!புஷ் பாஸ்திராம் புயபாணி!
தொண்டர்கட் கருள்சர் வாணி!
அந்தரி! மலர்ப்பிரம ராதிதுதி வேதவொலி
வளர்திருக் கடவூ ரில்வாழ்
வாமி!சுப நேமி!புகழ் நாமி!சிவ சாமிமகிழ்
வாமி!அபி ராமி! உமையே! 2

வாசமலர் மருவளக பாரமும் தண்கிரண
மதிமுகமும் அயில்விழி களும்
வள்ளநிகர் முலையுமான் நடையுநகை மொழிகளும்
வளமுடன் கண்டு மின்னூர்
பாசபந் தத்திடை மனங்கலங் கித்தினம்
பலவழியும் எண்ணி யெண்ணிப்
பழிபாவம் இன்னதென் றறியாமல் மாயப்ர
பஞ்சவாழ் வுண்மை என்றே
ஆசைமே விட்டுவீ ணுகநாய் போல்திரிந்(து)
அலைவதல் லாமல் உன்றன்
அம்புயப் போதெனுஞ் செம்பதந் துதியாத
அசடன்மேற் கருணை வருமோ?
மாசிலா தோங்கிய குணகரி பவானிசீர்
வளர்திருக் கடவூ ரில்வாழ்
வாமிசு!சுப நேமி!புகழ் நாமி!சிவ சாமிமகிழ்
வாமி!அபி ராமி! உமையே! 3

நன்றென்று தீதென்று நவிலுமிவ் விரண்டினுள்
நவின்றதே உலகி லுள்ளோர்
நாடுவார் ஆதலின் நானுமே அவ்விதம்
நாடினேன் நாடி னாலும்
இன்றென்று சொல்லாமல் நினதுதிரு வுள்ளம(து)
இரங்கி யருள்செய்கு வாயேல்
ஏழையேன் உய்குவேன்; மெய்யான மொழியிஃதுன்
இதயமறி யாத துண்டோ?
குன்றமெல் லாம்உறைந்து என்றும்அன் பர்க்கருள்
குமார தேவனை அளித்த
குமரி!மர கதவருணி! விமலி!பை ரவி!கருணை
குலவுகிரி ராச புத்ரி!
மன்றல்மிகு நந்தன வனங்கள்சிறை அளிமுரல
வளர்திருக் கடவூ ரில்வாழ்
வாமி!சுப நேமி!புகழ் நாமி!சிவ சாமிமகிழ்
வாமி!அபி ராமி! உமையே! 4

ஒருநாள் இரண்டுநாள் அல்லநான் உலகத்து
உதித்தஇந் நாள்வ ரைக்கும்
ஒழியாத கவலையால் தீராத இன்னல்கொண்(டு)
உள்ளந் தளர்ந்து மிகவும்
அருநாண் இயற்றிட்ட விற்போல் இருக்குமிவ்
வடிமைபாற் கருணை கூர்ந்து
அஞ்சேலெ னச்சொல்லி ஆதரிப் பவர்கள்உனை
அன்றியிலை உண்மை யாக
இருநாழி கைப்போதும் வேண்டாது நிமிடத்தில்
இவ்வகில புவனத் தையும்
இயற்றி யருளுந்திறங் கொண்டநீ ஏழையேன்
இன்னல்தீர்த் தருளல் அரிதோ ?
வருநாவ லூரர்முத லோர்பரவும் இனியபுகழ்
வளர்திருக் கடவூ ரில்வாழ்
வாமி!சுப நேமி!புகழ் நாமி!சிவ சாமிமகிழ்
வாமி!அபி ராமி! உமையே ! 5

எண்ணிக்கை இல்லாத துன்பங்கள் மேன்மேல்
ஏறிட் டொறுக்க அந்தோ !
எவ்விதம் உளஞ்சகித் துய்குவேன் ; இப்பொழுது
எடுத்திட்ட சன்மம் இதனில்
நண்ணியென் னளவுசுக மானதொரு நாளினும்
நான்அநு பவித்த தில்லை
நாடெலாம் அறியுமிது கேட்பதேன்? நின்னுளமும்
நன்றாய் அறிந்தி ருக்கும் ;
புண்ணியம் பூர்வசன னத்தினிற் செய்யாத
புலைய னுறுனும் நினது
பூரண கடாட்சவீட் சண்ணியஞ் செய்தெனது
புன்மையை அகற்றி யருள்வாய் ;
மண்ணவர்கள் விண்ணவர்கள் நித்தமும் பரவுமிசை
வளர்திருக் கடவூ ரில்வாழ்
வாமி!சுப நேமி!புகழ் நாமி!சிவ சாமிமகிழ்
வாமி!அபி ராமி! உமையே! 6

தெரிந்தோ அலாதுதெரி யாமலோ இவ்வடிமை
செய்திட்ட பிழையி ருந்தால்
சினங்கொண்ட தோர்கணக் காகவை யாதுநின்
திருவுளம் இரங்கி மிகவும்
பரிந்துவந் தினியேனும் பாழ்வினையில் ஆழ்ந்(து)இனற்
படாது நல்வரம் அளித்துப்
பாதுகாத் தருள்செய்ய வேண்டும்அண் டாண்டவுயிர்
பரிவுடன் அளித்த முதல்வி !
புரந்தரன் போதன்மா தவனுதி யோர்கள் துதி
புரியும் பாதாம் புயமலர்ப்
புங்கவி! புராந்தரி! புரந்தகி! புராதனி!
புராணி! திரி புவனே சுவரி!
மருந்தினும் நயந்தசொற் பைங்கிளி வராகி!எழில்
வளர்திருக் கடவூ ரில்வாழ்
வாமி!சுப நேமி!புகழ் நாமி!சிவ சாமிமகிழ்
வாமி!அபி ராமி! உமையே! 7

வஞ்சகக் கொடியோர்கள் நட்புவேண் டாமலும்
மருந்தினுக் காவேண் டினும்
மறந்துமோர் பொய்ம்மொழி சொலாமலுந் தீமையாம்
வழியினிற் செல்லா மலும்
விஞ்சுநெஞ் சதனிற் பொருமைதரி யாமலும்
வீண்வம்பு புரியா மலும்
மிக்கபெரி யோர்கள்சொ லும்வார்த்தைதள் ளாமலும்
வெகுளியவை கொள்ளா மலும்
தஞ்சமென நின(து)உபய கஞ்சந்து தித்திடத்
தமியேனுக் கருள்பு ரிந்து
சர்வகா லமுமெனைக் காத்தருள வேண்டினேன்;
சலக்கயல்கள் விழியை அனைய
வஞ்சியர்செவ் வாய்நிகரு வாவியாம் பன்மலரும்
வளர்திருக் கடவூ ரில்வாழ்
வாமி!சுப நேமி!புகழ் நாமி!சிவ சாமிமகிழ்
வாமி!அபி ராமி! உமையே! 8

எனதின்னல் இன்னபடி யென்றுவே றொருவர்க்(கு)
இசைத்திடவும் அவர்கள் கேட்(டு)இவ்
வின்னல்தீர்த் துள்ளத்(து)இரங்கிநன் மைகள்செயவும்
எள்ளளவு முடியாது நின்
உனதமரு வுங்கடைக் கண்ணருள் சிறிதுசெயின்
உதவாத நுண்மணல் களும்
ஓங்குமாற் றுயர்சொர்ண மலையாகும்; அதுவன்றி
உயரகில புவனங் களைக்
கனமுடன் அளித்துமுப் பத்திரண் டறங்களுங்
கவின்பெறச் செய்யு நின்னைக்
கருதுநல் லடியவர்க் கெளிவந்து சடுதியிற்
காத்துரட் சித்த தோர்ந்து
வனசநிகர் நின்பாதம் நம்பினேன்; வந்தருள்செய்;
வளர்திருக் கடவூ ரில்வாழ்
வாமி!சுப நேமி!புகழ் நாமி!சிவ சாமிமகிழ்
வாமி!அபி ராமி! உமையே! 9

கருநீல வடிவமார் மாடேறி உத்தண்ட
கனதண்ட வெம்பா சமுங்
கைக்கொண்டு சண்டமா காலன்முன் எதிர்க்கமார்க்
கண்டன் வெருண்டு நோக்க
இருநீல கண்டனெனும் நின்பதியை உள்ளத்தில்
இன்புகொண் டருச்சனை செய
ஈசனவ் விலிங்கம் பிளப்பநின் றெழுதோன்றி
யமனைச் சூலத்தி லூன்றிப்
பெருநீல மலையென நிலத்தில்அன் னவன்விழப்
பிறங்கு தாளால் உதைத்துப்
பேசுமுனி மைந்தனுக் கருள்செய்த(து) உனதரிய
பேரருளின் வண்ண மலவோ?
வருநீல மடமாதர் விழியென்ன மலர்வாவி
வளர்திருக் கடவூரில்வாழ்
வாமி!சுப நேமி!புகழ் நாமி!சிவ சாமிமகிழ்
வாமி!அபி ராமி! உமையே! 10

சகலசெல் வங்களுந் தரும்இமய கிரிராச
தனயைமா தேவி! நின்னைச்
சத்யமாய் நித்யமுள் ளத்தில்து திக்குமுத்
தமருக்(கு) இரங்கி மிகவும்
அகிலமதில் நோயின்மை கல்விதன தானியம்
அழகுபுகழ் பெருமை இளமை
அறிவுசந் தானம்வலி துணிவுவாழ் நாள்வெற்றி
ஆகுநல் லூழ்நு கர்ச்சி
தொகைதரும் [1]பதினாறு பேறும்தந் தருளிநீ
சுகானந்த வாழ்வளிப் பாய் ;
சுகிர்தகுண சாலி!பரி பாலி!அநு கூலி!திரி
சூலி!மங் களவி சாலி !
மகவுநான் ; நீதாய் அளிக்கொ ணாதோ?மகிமை
வளர்திருக் கடவூ ரில்வாழ்
வாமி!சுப நேமி!புகழ் நாமி!சிவ சாமிமகிழ்
வாமி!அபி ராமி! உமையே ! 11

---

1. இப்பதினாறு பேற்றை, "துதிவாணி வீரம் விசயம்சந் தானம் துணிவுதனம், அதிதா னியம்சவு பாக்கியம் போகம் அறி(வு) அழகு, புதிதாம் பெருமை அறம்குலம் நோயின்மை பூண்வயது, பதினாறு பேறும் தருவாய் மதுரைப் பராபரனே" எனவரும் காளமேகப் புலவர் பாடலாலும் அறியலாம்.

## திருக்கடவூர்

# அபிராமி அந்தாதி[1]

மனிதரும் தேவரும் மாயா முனிவரும் வந்துசென்னி
குனிதரும் சேவடிக் கோமள மே!கொன்றை வார்சடைமேல்
பனிதரும் திங்களும் பாம்பும் பகீரதி யும்படைத்த
புனிதரும் நீயும்என் புந்திஎந் நாளும் பொருந்துகவே. 4

சொல்லும் பொருளும் எனநட மாடும் துணைவருடன்
புல்லும் பரிமளப் பூங்கொடி யே!நின் புதுமலர்த்தாள்
அல்லும் பகலும் தொழுமவர்க் கேஅழி யாஅரசும்
செல்லும் தவநெறி யும்சிவ லோகமும் சித்திக்குமே. 28

தனம்தரும் கல்வி தரும்ஒரு நாளும் தளர்வறியா
மனம்தரும் தெய்வ வடிவும் தரும்நெஞ்சில் வஞ்சமில்லா
இனம்தரும் நல்லன எல்லாம் தரும்அன்பர் என்பவர்க்கே
கனம்தரும் பூங்குழ லாள்அபி ராமி கடைக்கண்களே. 69

விழிக்கே அருள்உண்(டு) அபிராம வல்லிக்கு வேதம்சொன்ன
வழிக்கே வழிபட நெஞ்சுண்(டு) எமக்(கு)அவ் வழிகிடக்கப்
பழிக்கே சுழன்றுவெம் பாவங்க ளேசெய்து பாழ்நரகக்
குழிக்கே அழுந்தும் கயவர்தம் மோடென்ன கூட்டினியே. 79

சிறக்கும் கமலத் திருவே! நின் சேவடி சென்னிவைக்கத்
துறக்கம் தருநின் துணைவரும் நீயும் துரியமற்ற
உறக்கம் தரவந்(து) உடம்போ(டு) உயிர்உற(வு) அற்றறிவு
மறக்கும் பொழுதென்முன் னேவரல் வேண்டும் வருந்தியுமே. 89

நன்றே வருகினும் தீதே விளைகினும் நான்அறிவ(து)
ஒன்றேயும் இல்லை உனக்கே பரம்எனக் குள்ளவெல்லாம்
அன்றே உனதென் றளித்துவிட் டேன்அழி யாதகுணக்
குன்றே! அருட்கடலே!இம வான்பெற்ற கோமளமே! 95

---

1. இங்கு, 102 பாடல்களில் சில பாடல்களே சேர்த்துள்ளன. இந்நூல் உரைநூலாகவும் மூலபாடமாகவும் பல வெளிவந்துள்ளமையால் முழுமையும் பதிக்கப்பெறவில்லை.

திருக்கடவூர்

## காலசங்கார மூர்த்திப் பின்முடுகு

### * வெண்பா

என்று தொழுவேன் எளியேன்; அளிமுரலும்
கொன்றைஅணி தென்கடவூர்க் கோமானே!—துன்றும்
கனற்பொறிகட் பகட்டிலுற்றுக் கறுத்ததெற்குத்
தனைச்சினத்திட் டுதைத்தபத்மத் தாள். [திசைக்குளூரத்

தொண்டருடன் கூடித் துதித்திரண்டு கண்ணாரக்
கண்டு தொழுவேனோ? கடவூரா!—பண்டோர்
அமுதிருக்குஞ் சிறுகடத்(து)அன்றெழும் உனக்(கு)அன்
எமனையெற்றும் பரிபுரச்செங் தாள். [பரைமருட்டும்

பற்றிப் பணிந்து பரவ வரந்தருவாய்
கற்றைச் சடையா! கடவூரா!—வெற்றிநெடுங்
கொண்டலொக்குங் கண்டசத்தங் கொண்டெதிர்த்(து)அங்
சண்டனைக்கண் டன்றுதைக்கும் தாள். [கங்கருக்கும்

மேகங் கவிந்ததுபோல் மேலெழுந்த காலனைக் கண்(டு)
ஆகந் தளர்ந்துநெஞ்சம் அஞ்சாமுன்—மாகடவூர்ப்
பூதநாதா! வேதகீதா! பூவிதாதா தேடுபாதா!
மாதுபாகா! காலகாலா! வா. 4

அன்றயன்மால் காணா அடிமுடியைக் காண்பதற்குத்
தென்றிசைக்கோன் என்னதவஞ் செய்தானோ?—வென்றிதிகழ்
ஆடரவாளா! நீறணிதோளா! ஆதிரைநாளா! மாதுமணாளா!
தோடவிர்காதா! மாகடவூரா! சொல். 5

---

* இங்குவரும் வெண்பாக்கள் பத்தும் சீரும் தளையும் சிதைந்துவந் துள்ளன; பத்தாவது வெண்பா தவிர மற்றைய வெண்பாக்கள் பெயர் தெரியாத பல வித்துவான்கள் பாடிய தனிப்பாடல் திரட்டிலும் காணப் படுகின்றன. இவை பழம் பாடல் பாதுகாப்புக்காக இங்குச் சேர்க்கப் பெற்றுள்ளன. தருமபுர ஆதீன அபிராமி யந்தாதி—வெளியீடு எண் 158-லும் இவை தரப்பெற்றுள்ளன.

ஆற்றுமோ நெஞ்சத் தடங்குமோ கொண்டமையல்
கூற்றுதைத்த தென்கடலூர்க் கோமானே!—மாற்றுயர்பொற்
கும்பமுலைத் திங்கள் நுதற் கொந்தளக் கொம்பைவெறுத்(து)
அம்புதொடுத்(து) அங்கசன்விட் டால். 6

தென்றல் உலவுந் திருக்கடவூர் எம்பெருமான்
மன்றல் செறிந்தே மதுவூறும் கொன்றைக்காப்
பொன்பரவுந்திண் கொங்கையிரண்டும் புண்பட நொந்தும்
அன்புதிரண்டும்பெண் கொடிநெஞ்சஞ் சும். [துன்பமிகுந்தும்

சுடுமோ இளந்தென்றல் தோகையின்மேல் அம்பு
படுமோமெய் வாதைப் படுமோ?—கடவூரா!
நீரணங்கார் வேணிநம்பா! நீலகண்டா! மேனியின்பால்
ஆரணங்கார் காலசங்கா ரா. 8

பாலனுக் காவன்று பகடேறி வந்தெதிர்த்த
காலனுக்குக் காலா! கடவூரா!—மேலோர்
கரும்புகொண்டங்(கு) எதிர்ந்துவந்(து)அங் கசன்பொருஞ்
மருண்டுநெஞ்சங் கலங்குமென்றன் மான். [செஞ்சரங்கள்கண்டு

நீதிநெறி வேதியர்கள் நீங்கா மறைபயிலும்
ஆதிகட வூரிலுறை அம்மானை—பாதம்
பரவியங்கம் புளகி வணங்கும் பொழுதுநெஞ்சங்
கரவுதுஞ்சுஞ் சமனஞ்சுங் காண். 10

திருக்கடவூர்ப் பிரபந்தங்கள்

முற்றிற்று

———

சிவ சிவ

# திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்துத் தலைவர்
# ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி
# அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் நிறுவிய தருமங்கள்

---

| | | முதற் பொருள் ரூபா |
|---|---|---|
| 1. | திருமுறை வளர்ச்சிக்கு ஆக 27 தருமங்கள் ... | 4,06,000 |
| 2. | கல்வி அபிவிருத்திக்கு ஆக 48 தருமங்கள் ... | 6,04,200 |
| 3. | சைவசித்தாந்தம் பரப்ப 7 தருமங்கள் ... | 1,56,000 |
| 4. | அன்னதானம் செய்ய 96 தருமங்கள் ... | 21,12,000 |
| 5. | வைத்தியம் செய்ய 5 தருமங்கள் ... | 1,22,500 |
| 6. | பொது தருமங்கள் - ஸ்நான கட்டம், அகதி நன்கொடை, தண்ணீர்ப் பந்தல், ஒளிவளர் விளக்குகள், பசுப் பரிசு, கல்லெழுத்து முதலிய 54 தருமங்கள் ... | 5,05,745 |
| | ஆகத் தருமங்கள் 237-க்கு ரூ. | 39,06,445 |

A083

| | | | ரூ. | அ. |
|---|---|---|---|---|
| 30 | திருக்குறள்-பொருட்பால் | .. ... | 2 | 8 |
| 31 | திருக்குறள்-காமத்துப்பால் | .. ... | 1 | 0 |
| | ஷை 29, 30, 31 திருக்குறள் மூன்று புத்தகமும் சேர்த்து வாங்கினுல் | ... | 4 | 0 |
| 32 | திருக்குறள் தமிழ்மறை K. M. வேங்கடராமையா M.A., B.O.L., அவர்கள் குறிப்புரையுடன் | ... | 0 | 12 |
| 33 | திருக்குறள்-பொருட்பால் பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் ... | ... | 0 | 2 |
| 34 | முதுமொழிமேல்வைப்பு ... | ... ... | 0 | 12 |
| 35 | திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள் ... | ... | 0 | 6 |
| 36 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா—மதுரை மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ்—மதுரைக் கலம்பகம்—நீதிநெறி விளக்கம்—மதுரை மீனுட்சியம்மை இரட்டைமணி மாலை—மதுரை மீனுட்சியம்மை குறம் ... | ... | 2 | 12 |
| 37 | திருவாரூர் நான்மணி மாலை—முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் | ... | 1 | 4 |
| 38 | சிதம்பர மும்மணிக்கோவை—சிதம்பரச் செய்யுட்கோவை—தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணி மாலை ... | ... | 1 | 0 |
| 39 | பண்டார மும்மணிக்கோவை-காசிக் கலம்பகம் சகலகலாவல்லி மாலை | ... ... | 1 | 0 |
| 40 | சிதம்பரச் செய்யுட்கோவை | ... ... | 0 | 12 |
| 41 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் ... | ... | 1 | 0 |
| 42 | தமிழிசைப் பாக்கள் ... | ... ... | 0 | 8 |
| 43 | பெரியபுராணம் உரைநடை | ... ... | 2 | 0 |
| 44 | திருவிளையாடற் புராணம் (உரை நடை) | ... | 2 | 4 |
| 45 | குமரகுருபர சுவாமிகள் சரித்திரப் பட விளக்கம்... | | 0 | 8 |
| 46 | அபிராமி பட்டர் பிரபந்தம் | ... ... | 0 | 5 |
| 47 | திருக்கயிலைத் திருமுறை | ... ... | 0 | 6 |

மேலே கண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள் :—

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள், " தியாகராஜ விலாசம் " 53, பிள்ளையார் கோவில் தெரு, திருவட்டீஸ்வரன் [பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை.
3. பன்னிரு திருமுறை மன்றம், தெற்கு ஆடி வீதி, மதுரை.

குறிப்பு:-ஷை விற்பனைத்தொகை "குமரகுருபரன்" பத்திரிகையைச்சாரும்

உ

# "குமர குருபரன்"

[ தமிழ்த் திங்கள் வெளியீடு ]

ஸ்ரீவைகுண்டம்

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடாலயத்திலிருந்து

மாதந்தோறும் வெளிவருகிறது



இது

சைவசித்தாந்தம், ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தம்,

பன்னிரு திருமுறை ஆராய்ச்சி, இலக்கியம்,

பிற மொழிகள் கலாசாரம் சம்பந்தமான

கட்டுரைகள் கொண்டது



நிர்வாக ஆசிரியர் :

**T. M. குமரகுருபரன் பிள்ளை, B.A., B.L.,**

(நிரந்தரத் தலைவர், குமரகுருபரன் சங்கம்)

மானேஜிங் டிரஸ்டி, ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடம்

ஸ்ரீவைகுண்டம்

வருட சந்தா ரு. 1—8—0 தனிப் பிரதி ரு. 0—2—0

தியோடர் பிரஸ், திருச்சிராப்பள்ளி.